
விலங்குகளை நேசித்த
ஆபி லிங்கன்
ஆலன் ஜாக்சன்

# விலங்குகளை நேசித்த ஆபி லிங்கன்



ஆலன் ஜாக்சன்



பல வருடங்களுக்கு முன் *கெண்டகி*யின் காடுகளில் வசித்து வந்த ஒரு சிறுவன் விலங்குகளை நேசித்தான்.

அச்சிறுவன் ஆபிரகாம் லிங்கன் வசந்த காலத்தில் குட்டிகளீன்ற ஒரு நரியைக் கண்டான். குளிர்காலத்தில் ரக்கூன்கள் கருவாலிக் கொட்டைகளைச் சேகரிப்பதைப் பார்த்தான்.

விலங்குகளாலும் வலியையும் மகிழ்ச்சியையும் உணர முடியும், அவைகளுக்கும் தனிப்பட்ட வாழ்க்கைமுறை இருக்கிறது என்று சிறு வயதிலேயே ஆபிரகாம் அறிந்து கொண்டான்.



அச்சிறுவனின் குடும்பம் முதலில் *கெண்டகி*யிலும் பிறகு *இண்டியானா*விலும் ஒரு பண்ணையில் வசித்து வந்தது. ஆபிரகாமும் அவன் சகோதரி சாராவும் நீர் இறைத்து, விறகு வெட்டி, விதை விதைத்து, தானியங்களறைத்து அம்மாவுக்கு உதவினர். ஆபிரகாமின் அப்பா அவ்வப்பொழுது முயலையோ மானையோ வேட்டையாடினார். அந்நாட்களில் எல்லைப் பகுதிவாசிகள் மிருகங்களை வேட்டையாட வேண்டியிருந்தது. குடும்பத்தில் ஒவ்வொருவரும் உணவுக்காக உழைத்தனர்.



அவருடைய குடும்பத்தார் பெரியவனாகிவிட்ட ஆபிரகாம் உணவு சேகரிக்க உதவுவானென்று எதிர்ப்பார்த்தனர். ஒரு நாள் ஆபிரகாமுக்குக் காட்டு வான்கோழிகள் தென்பட்டன. அவர் துப்பாக்கியால் ஒரு வான்கோழியைக் குறிபார்த்துச் சுட்டு வீழ்த்தினார். ஆனால் அடிபட்டப் பறவையைப் பார்த்து அவர் மிகவும் வருந்தினார். ”இனி நான் பறவைகளை வேட்டையாட மாட்டேன்” என்று மனதில் எண்ணிய அவர் பின்பு ஒருபொழுதும் வேட்டையாடவில்லை.

சதா விலங்குகளைத் துன்புறுத்தும் மற்றக் குழந்தைகளைப் போல் ஆபிரகாம் இல்லை. ஒரு முறை பள்ளியில் சிறுவர்கள் ஆமையின் முதுகில் எரியும் கரித்துண்டை வைப்பதைப் பார்த்த அவர் அச்சிறுவர்களிடம் பேசி அப்படிச் செய்வதைத் தடுத்தார்.

அவர் அச்சிறுவர்களிடம், ”விலங்குகளைக் கொடுமைப்படுத்துவதுத் தவறு. ஒரு எறும்பும் தன் வாழ்க்கைக்கு முக்கியத்துவம் தருகிறது,” என்றார்.







இளைஞன் ஆபிரகாம் *இலினாய்* மாநிலத்தில் *ஸ்பிரிங்ஃபீல்டு* என்ற இடத்தில் வக்கீலாகப் பணிபுரிந்தார். அவர் இருபது வயதிலேயே ஒரு உரை நிகழ்த்தினார். அந்த உரை ஒரு செய்தித்தாளில் வருமளவிற்குக் கேட்டவர்களைப் பரவசப்படுத்தியது. அவர் அங்குள்ள முக்கியஸ்தர்களின் கவனம் கவர்ந்தார். ஆனால் அதற்குப் பிறகும் ஆபிரகாம் விலங்குகளுக்காக நேரம் ஒதுக்கினார்.

ஒரு நாள் அவரும் அவர் நண்பர்களும் குதிரை சவாரி செய்து எங்கோ போய்க்கொண்டிருந்தனர். ஆல்பக்கோடா, ஆப்பிள் போன்ற மரங்களின் தோப்பைக் கடக்கும்பொழுது ஆபிரகாம் அப்படியே நின்றுவிட்டார். ஒரு பறவையின் இரண்டு குஞ்சுகள் தன் கூட்டின் வெளியே பறந்து வந்து உதிர்ந்த இலைகளைப்போலக் கீழே விழுந்திருந்தன.

ஆபிரகாம் தன் குதிரையிலிருந்து இறங்கினார். அக்குஞ்சுகளோடு மரமேறி அவைகளைக் கூட்டிலே வைத்தார்.

“என்ன முட்டாள்தனம் இது,” என்று சொன்ன ஆபிரகாமின் நண்பன் ஜோஷ்வா ஸ்பீட், “நீ உன் அருமையான உடையை அழுக்காக்கிக் கொண்டாய்” என்றான்.

“நான் இந்தக் குட்டிகளுக்கு உதவாமல் போயிருந்தால் எனக்கு இரவு முழுவதும் உறக்கம் வந்திருக்காது” என்று மெல்லக் கூறினார் ஆபிரகாம். அவர் தன்னைக் கண்டுச் சிரிக்கும் நண்பர்களைப் பொருட்படுத்தவில்லை.



1839 ஆம் ஆண்டு ஒரு சமயம் ஆபிரகாம் நடனமாடும்பொழுது நட்பும் தைரியமும் உள்ள மேரி டாட் என்ற பெண்ணைச் சந்தித்தார். மூன்று வருடங்கள் கழித்து இருவரும் திருமணம் செய்துகொண்டனர். அடுத்தப் பதினோறாண்டுகளில் அவர்களுக்கு ராபர்ட், எட்டி, வில்லி, டெட் என்ற நான்கு மகன்கள் பிறந்தனர்.

ஆபிரகாம் தன் வீட்டில் பூனைகளுக்கும் நாய்களுக்கும் அவைகளின் குட்டிகளுக்கும் கூட இடம் ஒதுக்கியிருந்தார். அவருக்கும் அவர் மகன்களுக்கும் காட்டில் திரிவது, அங்குள்ள பட்டாம்பூச்சிகளையும், மற்ற புழு பூச்சிகளையும், கற்களையும் ஆராய்வது பிடித்திருந்தது..

ஆபிரகாம் அருகிலுள்ள நகரங்களில் வக்கீலின் தேவையுள்ளவர்களுக்குப் பணிபுரியச் செல்லும்பொழுது தனக்குப் பிரியமானக் குதிரை*ஓல்டு பாப்* மேல் சவாரி செய்வார். பயண முடிவில் அவர் *பாபின்* கால்களைப் பரிசோதித்து, மூக்கைத் தடவிக்கொடுத்துக் கேரட் உண்ணக் கொடுப்பார்.



தொங்கும் காதுகளுடைய ஃபிடோ என்ற நாய் லிங்கனின் குடம்பத்தோடு வசித்து வந்தது. ஆபிரகாமும் ஃபிடோவும் அடிக்கடிக் கடைத்தெருவுக்குப் போய் வரும்பொழுது அந்த நாய் ஏதேனுமொரு பார்சலை வாயில் கவ்வி வரும். ஆபிரகாம் முடி வெட்டிக்கொள்ள பிலி பார்பரின் கடைக்குச் செல்லும்பொழுதெல்லாம் ஃபிடோ கடைக்கு வெளியே அவரை எதிர்பார்த்து உட்கார்ந்திருக்கும். அப்பொழுது குழந்தைகள் கூட்டமாக வந்துவிட்டால் ஆபிரகாம் வெளியே வரும் வரை ஃபிடோ அக்குழந்தைகளுடன் குதித்துத் தாவி விளையாடும்.





ஒரு முறை ஆபிரகாம் அமெரிக்காவின் *ஹாவுஸ் ஆ∴ ரெப்ரஸன்டேடிவ்* உருப்பினராகவும் இருந்துள்ளார். 1860ஆம் வருடம் அவர் அமெரிக்க ஜனாதிபதி வேட்பாளரானார். அவர் தேர்தலில் வென்ற பிறகு அவரது குடும்பத்தார் *வாஷிங்டன் டி.ஸி.*யிலுள்ள *வொயிட் ஹவுஸில்* குடியேறினர்.

தன் குடும்பத்தினருடன் *∴பிடோ*வையும் அழைத்துச் செல்ல முடியாது என்று ஆபிரகாம் மிக வருத்தத்துடன் தீர்மானித்தார். *வாஷிங்டன்* வரையிலான ரயில் பயணம் நீண்டதாகவும் கடினமாகவும் இருந்தது. மேலும் அவர் குடும்பத்தினர் மிக அதிகமான சாமான்களை எடுத்துச் செல்ல வேண்டி இருந்தது.

இதனால் ஆபிரகாம் அண்டை வீட்டுக்காரர் ரோல்ஸ் என்பவரிடம் *∴பிடோ*வை வைத்துக்கொள்ளுமாறு வேண்டிக்கொண்டார். அவர் *∴பிடோ*வின் மனதுக்குப் பிடித்த சோ∴பாவையும் ரோல்ஸிடம் கொடுத்தார்.

"நீங்கள் ஒரு வாக்குத் தர வேண்டும்", *∴பிடோ* அழுக்கான கால்களோடு வீட்டுக்குள் வந்தால் அவனை நீங்கள் திட்டக்கூடாது. அவனை ஒருபொழுதும் தனியாக பின்னறையில் கட்டி வைக்கக் கூடாது. எப்பொழுது அவன் கதவைப் பிராண்டினாலும் அவனை வீட்டுக்குள் வர அனுமதிக்க வேண்டும்" என்று ஆபிரகாம் ரோல்ஸைக் கேட்டுக்கொண்டார்.

*∴பிடோ*வின் புதிய குடும்பம் எல்லா நிபந்தனைகளையும் ஏற்றுக்கொண்டது. நாட்டின் புதிய ஜனாதிபதியின் சொல்லைத் தட்ட முடியாதே? வாஷிங்டன் செல்வதற்கு முன் லிங்கன் குடும்பத்தினர் கேமராவில் *∴பிடோ*வுடன் ஒரு படம் எடுத்துக்கொண்டனர் . இதுவே புகைப்படக்கலையின் தொடக்கக் காலத்தில் ஒரு ஜனாதிபதியின் வளர்ப்பு நாயின் முதல் புகைப்படமாகும்.

*வாஷிங்டனில்* லிங்கன் குடும்பத்தினர் தங்கள் புதிய வீட்டை, முயல், நாய்கள், பூனைகள் போன்ற பல வளர்ப்பு மிருகங்களால் நிரப்பிவிட்டனர். அவர்களிடம் சில ஆடுகளும் இருந்தன. ஒரு முறை ஆபிரகாமின் கடைக்குட்டி மகன் ஆடுகளை ஒரு நாற்காலியோடு சேர்த்துக் கட்டி *வொயிட் ஹவுஸை* சுற்றிக்காட்டத் தொடங்கினான். மேலும் வரவேற்புக்கு வந்த மகளிரை அங்கும் இங்கும் தெறித்து ஓடவிட்டான்.

இரவு உணவின்பொழுது, தன்னருகிலுள்ள நாற்காலியில் உட்கார்ந்த பூனையிடம் ஜனாதிபதி செல்லம் கொஞ்சுவதை விருந்தாளி ஒருவர் பார்த்தார். திரு லிங்கன் *டாபி*க்கு தங்க ஸ்பூனில் ஊட்டிவிடுவதைப் பார்த்து திருமதி லிங்கன் கோபப்பட்டுக் கடிந்து கொண்டார்.

"ஜனாதிபதி புகானென் தங்க ஸ்பூனில் சாப்பிட்டாரென்றால் *டாபி*யும் சாப்பிடலாம்", என்றார் ஆபிரகாம் லிங்கன்.






புதிய ஜனாதிபதி பல பிரச்சினைகளில் உழன்று கொண்டிருந்தார். 1860ஆம் ஆண்டு அமெரிக்காவின் சில மாநிலங்களில் அடிமைத் தொழில் நடைமுறையில் இருந்தாலும் வேறு சில மாநிலங்களில் அடிமைகளை வைத்துக்கொள்வது அனுமதிக்கப்படவில்லை. வெள்ளையர்கள் வெள்ளையல்லாத மனிதர்களை அடிமையாக வைத்துக்கொள்வதுதான் அடிமைப்படுத்துதல் என்ற கொடிய வழக்கம். இந்த அடிமைகள் அதிக வேலை வாங்கப்பட்டுக் கொடூரமாக நடத்தப்பட்டார்கள். “வருங்காலத்தில் அமெரிக்காவின் மாநிலங்களாகும் பகுதிகளில் அடிமைத் தொழிலுக்குத் தடை விதிக்கப்படும்” என்று ஆபிரகாம் லிங்கன் உறுதியளித்தார். “மக்கள் தொகையில் ஒருபாதி சுதந்திரமாகவும் மறுபாதி அடிமையாகவும் இருக்கும் நிலையை என் அரசாங்கம் எப்பொழுதுமே பொருத்துக்கொள்ளாது என்பதில் எனக்கு நம்பிக்கை இருக்கிறது” என்றார்.

ஆபிரகாம் லிங்கன் தேர்தலில் வென்றதும் அடிமைத்தொழில் நடைமுறையிலிருந்த சில தென் மாநிலங்கள் கூட்டரசிலிருந்து பிரிந்து தனிக் கூட்டமைத்துப் புதிய அரசாங்கத்தை ஏற்படுத்தின. ஆனால் ஆபிரகாம் லிங்கன் தன் நாட்டின் ஒருமைப்பாட்டை நிலை நாட்டுவதற்காகப் போருக்கும் தயாராக இருந்தார்.





*யுனைடெட் ஸ்டேட்ஸில்* விரைவிலேயே ஒரு அபாயகரமான உள் நாட்டுப் போர் தொடங்கியது. ஆபிரகாம் லிங்கன் கூட்டரசைக் காப்பதற்காக அடிமைத்தனத்தை ஒழிக்க எண்ணினார். 1863ஆம் ஆண்டு அடிமைகளின் விடுதலை அறிவிக்கப்பட்டவுடன் எதிர்ப்பு மாநிலங்களிலுள்ள அனைத்து அடிமைகளும் விடுவிக்கப்பட்டார்கள். இத்தீர்மானத்தினால் பலர் ஜனாதிபதியை வெறுத்தனர். வேறு பலர் அவரை ஒரு மாபெரும் மனிதராகக் கருதினர். ஆபிரகாம் லிங்கன் மிக்க தைரியத்துடன் *யுனைடெட் ஸ்டேஸ்* அரசு வாயிலாக அனைத்து மக்களுக்கும் சுதந்திரத்தை உறுதி செய்தார்.



போர் தொடர்ந்து கொண்டிருந்தது. போர்க்களத்தில் இறந்த போர்வீரர்களின் உடற்குவியல் காய்ந்த சருகுகளின் குவியலைப் போன்று உயர்ந்து காணப்பட்டன. ஆபிரகாம் லிங்கனின் முகம் கவலையினால் வாடிக் களையிழந்திருந்தது.

விலங்குகளின் அருகாமையால் ஜனாதிபதி மன அமைதி அடைந்தார். ஒரு முறை, கூட்டரசு இராணுவத் தளபதி, ஜெனரல் க்ராண்ட்டைச் சந்திக்க இராணுவத் தலைமையகத்திற்குச் சென்று கொண்டிருந்த அவர் வழியில் மூன்று பூனைக்குட்டிகளைக் கண்டார். சில காலம் முன் தன் அன்னையை இழந்திருந்த அவர் அந்தக் குட்டிகளை எடுத்து வருடிக்கொடுத்தார். அங்கிருக்கும் கர்னலிடம், “நீங்கள் இந்தத் தாயில்லாக் குட்டிகளுக்குப் பால் அருந்தக் கொடுத்து கவனித்துக் கொள்வீர்கள் என்று நம்புகிறேன்” என்றார். பூனைக்குட்டிகள் அக்கறையோடு கவனித்துக் கொள்ளப்படும் என்று கர்னல் உறுதி அளித்தார்.

போரில் ஆபிரகாம் பரபரப்பாக இருந்தாலும், தன் பிள்ளைகளுக்காக நேரம் ஒதுக்கத் தவறவில்லை. ஓராண்டு, கிரிஸ்மஸ்குச் சற்று முன், டெட், *வொயிட் ஹாவுஸின்* தோட்டத்தில் அலைந்துக் கொண்டிருந்த ஒரு பெரிய வான்கோழியைக் கண்டான். அதற்கு ஜாக் என்று பெயரிட்டு அதன் கழுத்தில் ஒரு கயிற்றைக் கட்டி *வொயிட் ஹாவுஸைச்* சுற்றிக் காட்டி எல்லா பணியாளர்களையும் சந்திக்க வைத்தான்.

சமையல்காரர் வான்கோழியைப் பார்த்தவுடன், “அட, நீ கிரிஸ்மஸின் இரவு உணவைச் சந்தித்துவிட்டாய்” என்றார்.

என்ன! ஜாக்கைக் கொன்று கிரிஸ்மசுக்கு விருந்தாக்கிவிடுவார்களா? டெட் ஜனாதிபதியின் அலுவலகத்தை நோக்கி ஓடினான். அங்கு அவன் தந்தையார் பெரிய அலுவலகக் கூட்டத்தில் முக்கிய வேலையாயிருந்தார்.

“அப்பா! ப்ளீஸ், அவர்களை ஜாக்கைக் கொல்லச் சொல்லாதீர்கள். அது ஒரு நல்லப் பறவை. அதைக் கொல்வது சரியல்ல” என்றான் டெட்.

ஆபிரகாம் அவன் சொல்வதைப் பொருமையாகக் கேட்டார். பல ஆண்டுகளுக்கு முன் அவரும் ஒரு வான்கோழியைத் துப்பாக்கியால் சுட்டிருக்கிறார். அப்பொழுது அவரடைந்த துன்பம் ஒருவேளை அவர் மனதில் மீண்டும் வெளிப்பட்டிருக்கலாம். ஆனால் இம்முறை நிகழ்வின் முடிவு வேறாக இருக்கும்.

“அது ஒரு நல்ல பறவை, டெட்”, என்று சொன்ன ஆபிரகாம், “நான் அதை மன்னித்து விடுவேன். நான் ஒரு ஜனாதிபதி அல்லவா?” என்றார்..

பிறகு ஆபிரகாம் லிங்கன் ஜாக்கிற்குக் கருணை *ஆர்டர்* எழுதி அதில் கையெழுத்திட்டார். அத்துடன் அந்தப் பறவை லிங்கன் குடும்பத்தின் உருப்பினறாகியது.

1864ஆம் ஆண்டில் நான்கு வருடங்களுக்கு ஆபிரகாம் லிங்கன் மீண்டும் ஜனாதிபதி பதவிக்காகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஆனால் உள்நாட்டுப் போர் முடிவுக்கு வந்து நாடு ஒன்றுபட்டச் சில காலத்திற்குள் ஏப்ரல் 1865ஆம் வருடத்தில் ஆபிரகாம் லிங்கனை ஒரு கொலைகாரன் துப்பாக்கியால் சுட்டுக் கொன்றான். தங்களின் அன்புக்குரிய ஜனாதிபதியின் மரணம் நாட்டு மக்கள் பலரை சோகத்தில் ஆழ்த்தியது.

ஜனாதிபதி லிங்கனை *ஸ்பிரிங்ஃபீல்டு, இலினாய்* என்ற இடத்தில் அடக்கம் செய்யும்பொழுது *ஓல்டு பாப்* வெள்ளிக் கரையுள்ள கம்பளியை அணிந்து இறுதி ஊர்வலம் பின்னால் நடந்து கொண்டிருந்தது. சோகத்திலிருந்த மக்களைச் சந்திக்க *ஃபிடோ*வும் அதன் பழைய இல்லத்திற்கு அழைத்து வரப்பட்டது.



நாட்டை ஒன்றுபடுத்தி அடிமை விடுதலையை அறிவித்த ஆப்ரகாம் லிங்கனைப் போன்ற ஜனாதிபதிக்கு எங்குள்ள மக்களும் இன்று மரியாதை செலுத்துகின்றனர்.

ஆபிரகாம் மிருகங்களை நேசித்ததை மக்கள் இன்றும் நினைவு கூறுகின்றனர். ஒவ்வோராண்டும் *தாங்ஸ் கிவிங்* கொண்டாட்டத்தை முன்னிட்டு *யுனைடெட் ஸ்டேட்ஸின்* ஜனாதிபதி ஒரு வான்கோழியை மன்னித்து விட்டுவிடுகிறார். நூறு வருடங்களுக்கு முன்பு ஆபிரகாம் லிங்கன் செய்ததைப் போலவே.



ஆபிரகாம் லிங்கனின் இருதயத்தில் சிறியதும் பெரியதுமான எல்லா உயிரினங்களுக்கும் இடமிருந்தது. அமெரிக்காவின் பூர்வகுடிகளின் புராணக் கதையின்படி ஒரு மனிதன் தன் வாழ்நாளில் நட்புடன் இருந்த உயிரினங்களையெல்லாம் இறந்த பின் சந்திக்கிறான். அப்படியென்றால் காற்றிலிருந்தும், நீரிலிருந்தும், பூமியிலிருந்தும் பல ஆன்மாக்கள் ஆபிரகாம் லிங்கனை வரவேற்றிருக்கும்.

